கோயிலுக்குச் சென்று அவர்கள் பாடின தேவாரங்களை யாழில் இசையுடன் பாடி வந்திருக்கிறார்கள். திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் மனைவியாரும் திருச்சாத்த மங்கையில் திருநீலநக்கநாயனார் ஆகிய பிராமணர் வீட்டில்வேள்விக்குண்டத்துக்குப் பக்கத்தில் தங்கியிருக்க இடம் பெற்றிருக்கிறார்கள். பண்டைக்காலத்தில் பஞ்சமர்கள் சைவக் கோயிலுக்குள்ளே போய் வணங்கக் கூடாது என்ற விதியிருந்ததாகப் பண்டைத் தமிழ் இலக்கியங்களிற் காணப்படவில்லை. பெரியபுராணம் திருநாளைப்போவார்நாயனார் வரலாற்றில் மாத்திரம் நந்தனார் ஆகிய பஞ்சமப் பெரியார் திரு ஆதனூர்ச் சிவன்கோயிலுக்கும் தில்லைச் சபாநாதர் கோயிலுக்கும் போகக்கூடாது என்ற தடையிருந்ததாக நமக்குத் தெரிகிறது. பிற்காலத்தில் பஞ்சமர்கள் செத்த மாடுகளையும் உயிரோடுள்ள மாடுகளையும் உண்ணுதல், கட்குடித்தல், பேய்த் தெய்வம் தொழுதல் முதலிய அசுத்தமான வழக்கங்களை உடையவர்களா யிருந்ததனால் அவர்கள் ஊருக்குப் புறம்பே தனியாக ஓரிடத்தில் ஒதுக்கி வைக்கப்பட்டார்கள் என்பது நாம் அறியக் கிடக்கின்றது. இப்பொழுது காடன் முதலிய பேய்த்தெய்வங்களைத் தொழுதலையும் மாட்டூன் தின்னலையும் கள்ளுண்ணுதலையும் விட்டு, சைவக்கோயிலுக்குப் போய் வழிபாடு செய்தல் வேண்டும் என்ற ஆர்வமுடைய தீண்டாதார்களுக்குக் கோயிலுள் இப்போது வழிபடுதற்கு ஏன் இடங்கொடுத்தல் கூடாது? அசுத்தம் உடையவர்கள் எப்பொழுதும் அசுத்தமாகவே இருத்தல் வேண்டுமா? சுத்தத்தை அடைய விரும்புகிற பஞ்சமர்களுக்கு அவர்கள் சுத்தமுள்ளவர்களாய்க் கோயிலில் வழிபாடு செய்ய ஏன் நாம் இடங்கொடுக்கக்கூடாது? அவர்களுக்கு மற்ற இந்து மக்களோடு இருக்கிற பொது உரிமையைத் தடுக்க நமக்கு என்ன உரிமையிருக்கிறது? சிலர் கடவுளுக்குத் தீட்டு உண்டா, பஞ்சமர்கள் ஏன் கடவுள் திருஉருவங்கள் கிட்டப் போகக்கூடாது என்கிறார்கள். கோயிலிலிருக்கிற உருவங்கள் அசுத்தப்பட்டு அவைகளிலுள்ள சத்தி (magnetism) குறைதல்கூடும். அந்தச் சத்தி குறையாமலிருக்கச் செய்தற்காகவே அடிக்கடி மந்திரம்செய்யப்பெற்ற கும்ப நீரும் பால் இளநீர் முதலிய நீர்ப்பொருள்களும் திருஉருவங்களுக்கு அபிடேகம் செய்யப்படுகின்றன. இப்பொழுது கோயிலுக்குப்போய் வழிபாடு செய்கிறவர்களெல்லாம் சுத்தமாயிருக்கிறார்களா? பஞ்சமர்கள் மாத்திரம் ஏன் சுத்தமா யிருத்தல்வேண்டும் என்று சிலர் கூறுகிறார்கள். எக்குலத்திலுள்ளவர்களானாலும் கோயிலுக்குள்போய் வழிபாடு செய்ய ஆர்வமுள்ளவர்கள்தான் அங்கே போவார்கள். அவர்கள் பொதுவாக இப்பொழுது உள்ள பஞ்சமர்களைப் பார்க்கிலும் சுத்தமா யிருப்பார்கள். அவர்களிலும் சிலர் பஞ்சமர்களைப்போல தவறு உடையவர்களா யிருந்தாலும் கோயிலுக்கு இனிப் போக உரிமை கேட்கிற பஞ்சமர்களும் அத்தவறுகளினின்று நீங்கிப்போதல் வேண்டும் என்று கூறுதல் அவர்களை அத்தவறுகளினின்று நீக்குதற்குத் தூண்டுதலா யிருக்கும். மேலும் இனிச் செய்யப்படும் கோயிற் சீர்திருத்தங்களில் கோயில் தூய்மையாய் வைக்கப்பட வேண்டும் என்பது ஒன்று. அகந்தூய்மை புறந்தூய்மை உள்ள கோயில்களில் இறைவனது அருள் நன்கு விளங்கி அன்பாக வழிபாடு செய்கிறவர்கள் அவ்வருளினைப் பெறுவர். கோயில்களில் தூய்மை எவ்வளவு குறையுமோ அவ்வளவு அருள் விளக்கமும் குறையும் ஆதலின் கோயிலுக்குள் புகுந் தகுதி யுடைமைக்கு அங்கே போகிறவர்களுடைய அகந்தூய்மையும் புறந்தூய்மையும் காரண மன்றி இப்பொழுது நிலவுகிற உள்ளீடில்லாத சாதியும் குலமும் இனிமேற் காரணமாயிருத்தல் கூடாது. சாதியையும் குலத்தையும் காரணமாகக் கொள்ளுதலினாலே சில பகுதி மக்கள் கோயிலுக்

குப் போகும் உரிமையைத் தடுத்து அவர்களை மேல் நிலைக்கு வரவொட்டாமல் செய்கிறார்களே தவிர அதனால் நற்பயன் ஒன்றும் உண்டாதலில்லை. அநுட்டானத்தில் கோயிலுக்குப் போகிறவர்களுடைய அகந்தூய்மையை நாம் நிதானிக்க முடியாது. கூடியவரை புறந்தூய்மையையே கவனித்தல் முடியும். மேற்கூறியவைகள் எனது கருத்துக்கள். எந்த விதமான நிபந்தனைக்குட்பட்டு, தீண்டாதார் சைவக் கோயிலுக்குப் போய் வழிபாடு செய்யலாம் என்பதைத் தாங்கள் சூழ்ந்து முடிவு செய்தல்வேண்டும்.

முடிவுரை:—சிவநேயச் செல்வர்களே! இதுகாறும் எனது சிற்றறிவுக்கு எட்டியவரை சைவ சமயத்தினது சிறப்பு இலக்கணம் சிலவற்றைப் பற்றியும், தீண்டாதார் சம்பந்தமாய் இப்பொழுது நமது நாட்டில் எழுந்திருக்கிற கேள்விகளைப்பற்றியும் சொன்னேன். நான் சொன்னவைகளை ஆராய்ந்து நமது நாட்டு நலத்துக்கு இணங்க நடுவு நிலையில் நின்று முடிவு செய்யும்படி தங்களை வணக்கமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

நமது நாட்டு நலம் என்பது, நமது நாட்டில் வாழும் எல்லாப் பகுதி மக்களுடைய நலம். இந்து மக்கள், மகம்மதிய மக்கள், பார்சிகர்கள், ஐரோப்பியர்கள். முதலிய எல்லா மக்களுடைய நலமே நமது நாட்டு நலம் என்பது. நமது நாட்டிலுள்ள நலமும் பிறநாட்டிலுள்ள நலத்துக்கு முரணாது பொருந்தும்படியிருத்தல்வேண்டும். நமது சைவ சமயமானது கடவுளுடைய கருத்துக்கு இணங்க எல்லா மக்களுடைய நலத்தையும், மக்களுக்குக் கீழேயுள்ள எல்லாப் பிராணிகளுடைய நலத்தையும் கருதும் சமயம். முன் நான் கூறியபடி வியாபகத் தன்மையும் இயற்கைத் தன்மையும் செயல் முறைத் தன்மையுமுடைய நமது சமய உண்மைக்குப் பொருந்திய தனி ஒழுக்கத்தையும், கூட்ட ஒழுக்கத்தையும் நாம் மேற்கொள்ள வேண்டும். நமது சமய அறிவும் சமய ஒழுக்கமும் வேறுபட்டிராமல் பொருந்தி ஒன்றுபட்டிருத்தல் வேண்டும். நமது சமய அறிவும் சமய ஒழுக்கமும் நமது நாட்டிலுள்ள பிறசமய மக்களுக்கும் பிறநாட்டிலுள்ள மக்களுக்கும் வழிகாட்டியாயுள்ளன. நமது சமய மேன்மையை வாயால் மட்டும் பிறசமயத்தாருக்குக் கூறாமல் நாம் எல்லா உயிர்களுடைய நலம்பற்றி ஒழுகும் அருள் ஒழுக்கத்தால் அருள் விளக்குகள்போல் விளங்குதல் வேண்டும். அப்பொழுதே நம்மிடம் விளங்கும் அருளொளி நம்மைச் சுற்றிலுமுள்ள மல இருளை நீக்கி இன்ப நலத்தை உண்டாக்கும். நமது ஒழுக்கத்தைப் பிறசமய மக்கள் பார்த்து அவ்வாறு ஒழுகும் நலம் அடையுமாறு நாம் ஒழுகல்வேண்டும். அங்ஙனம் நாமெல்லாம் ஒழுகுமாறு எல்லாம் வல்ல சிவபெருமான் அருள் செய்வாராக.

## வாழ்த்து

ஓங்குக சோதர வுணர்வு மக்களுள்
நீங்குக வவரிட நிலவு பகைமையே
ஓங்குக வமைதியா முணர்வு மக்களுள்
நீங்குக கலாமுணர் வவரி னின்றுமே.

வாழ்க சிவனருள் வாழ்க சிவநெறி
வாழ்க வுலகெலாம் வல்லருள் வழியிலே
வீழ்க மறமெலாம் வியனுல கெங்கணும்
ஆழ்க துயரெலா மாருயிர்க் கெங்குமே.

# சைவ சமயத்தின் சிறப்பியல்பு

[ஈ. த. இராஜேசுவரியம்மாள், எம். ஏ., எல். டி.]

## 1. சமயமும் நீதியும்

எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான கொள்கைகள் பல உள. அவை மக்கட் பிறவிக்கு இன்றியமையாத நன்னெறிச் சட்டங்களாம். அச் சட்டங்களை செவ்வனே ஓம்புதல், இந்நில உலகின் இனிய வாழ்க்கையில் யாதொரு கலகமுமின்றி வாழப் பயன்படும். கிறிஸ்தவ வேதத்தில் போதிக்கும் பத்துக்கற்பனைகள், அச்சமயத்திற்கே சொந்தமானவை என்று சொல்லுவதற் கிடமில்லை. அவை எல்லா மதங்களிலும் வேறு உடையுடன் காணப் படுகின்றன. நமது ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய சிறு பிள்ளைகள் கற்கும் நூல்களிலும் வைதிக ஒழுங்கில் வாழ்நாட்களைக் கழிக்க எல்லா நன்மக்களுக்கும் சட்டதிட்டங்கள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றனவன்றோ? எச்சமயமும் பொய் பேசவாகிலும் வேறு எவ்வித துர்க்காரியம் செய்யவாகிலும் போதிக்கவில்லை. ஆயினும் சில சமயங்கள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன் சட்டதிட்டமே மக்கள் வாழ்நாள் முற்றும் வைதீக நடைக்குப் போதுமானதென்று கொண்டு அவற்றுடன் நிற்கும். மற்றச்சமயங்களோ அவற்றுடன் திருப்தியாகாமல் இன்னும் மேலே செல்லவேண்டிய கருமங்கள் உளவென்றும், சமணர், பௌத்தர் போதித்த நாலடியார் முதலிய நூற்களின் வைதிக நிண்ணயம், வைதிக வாழ்க்கையின் ஆரம்பம் என்றே கொள்ளும்.

> "வேர்வந்துற மாசூர்தர வெயினின்றுழல் வாரும்
> மார்பம்புதை மலிசீவர மறையாவருவாரும்
> ஆரம்பர்த முரைகொள்ளன்மி னண்ணாமலை யண்ணல்
> கூர்வெண்மழுப் படையானல்ல கழல்சேர்வது குணமே."
>
> —சம்பந்தர் - திருவண்ணாமலை 10.

தெருப்பள்ளிக்கூடத்து நான்காம் வகுப்பு மாணவன் தன் வகுப்புக் கல்விக்குப் பெரியது இல்லை என்று எண்ணவேண்டாம்; இக்கல்வியை அடிப்படையாகக் கொண்டு மேலெழும் கல்வி வகுப்புக்கள் பல உள என்று ஆய்ந்து அறிவானாக! என்பதே நமது சமய குரவர் போதனையாம். அவ்வாறு அறியாமை விருத்திக்கு இடமில்லை என்றும், அறியவேண்டியது அறியாது ஒழிதல் மூர்க்கம் என்றும் சம்பந்தர் கூறுவார்,

> "பறிகொள் தலையினர்—அறிவதறிகிலார்
> நெறிகொள் மிழலையீர்—பிறிவதரியதே"

என்றார்.

## 2. சைவமும், மேல்நாட்டுச் சமயங்களும்

குற்றமற்ற உலக வாழ்க்கையில் நடப்பதே சைவம் முதலிய வைதிக வாழ்க்கைக்கு அடிப்படை என்று கண்டோம். ஆயினும் அவ்வடிப்படையின்மீது கட்டப்பட்ட ஏனைய சமயங்களுக்கும், அதாவது முக்கியமாய் மேல்நாட்டுச் சமயங்களுக்கும், நமது சைவசமயத்திற்கும் தத்துவத்தில் உள்ள பேதங்களில் முக்கியமானது ஒன்று கூறுகின்றேன். மேல்நாட்டுப் பார்வை

யில் மனிதனது நன்னெறி யென்பது ஒரு மனிதனுக்கும் மற்றொரு மனிதனுக்கும் இடையேயுள்ள சம்பந்தா சம்பந்தங்களைப் பற்றியதேயாம். வேறு ஜீவராசிகள், அந்நோக்கில் வர இடமே இல்லை. மேல்நாட்டுச் சமயங்களில், மனிதர்களைப்போல் எல்லா உயிருள்ள பிராணிகளுக்கும் ஆத்மா ஒன்று உண்டென்பது சித்தாந்தம் அல்ல. மனிதனுக்காக உலகில் எல்லாப் பிராணிகளையும் கடவுள் சிருஷ்டித்தார் என்பதும், அவன் இஷ்டப்படி அவற்றை உபயோகிக்கலாம் என்பதும் மேல்நாட்டுச்சமயங்களின் கொள்கையாம். நமது சமயமோ எல்லா உயிருள்ள ஜந்துக்களும் மனிதனைப்போலவே உலகத்தில் வசிக்க உரிமையுடையன என்றும், ஒவ்வொரு உயிருக்கும் உயிராய்ச் சிவபெருமான் திகழ்கின்றார் என்றும் போதிக்கின்றது.

"உரைசேரு மெண்பத்து நான்குநா றாயிரமாம் யோனி பேதம்
நிறைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா யங்கங்கே நின்றான் கோயில்
வரைசேரு முகில்முழவ மயில்கள்பல நடமாட வண்டு பாட
விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள் கையேற்கு மிழலை யாமே"

மனிதனுக்கு உணவளிக்கும் பூமிதேவி தனது மலர்க்கையான காந்தள் (சூரியகாந்தி) முதலிய புஷ்பங்களின் தேனால் வண்டுகளை ஆதரிக்கின்றது கண்டு ஆனந்தித்தவர்கள் நமது சமய குரவர்களே. நமது சமயத்திலோ ஒரு சிறு பிராணி அல்லது ஒரு புல் பூண்டு அழிப்பதற்கும் நமக்குச் சுதந்திரம் தானில்லை. சைவசமயம் ஊன் உண்ணாமையை மாத்திரம் போதித்து, தாவர ஜங்கம ஜீவர்களை இம்சிக்க விட்டு விடவில்லை. சைவம் என்பது சாதாரண சொற் பிரயோகத்தில் ஊனுண்ணாமை என்று பொருள்படினும், ஊனுண்ணாமைக்கும் பெரியதோர் கொள்கையாய் மரம் செடி முதலியவற்றிற்கும் அன்பு பூண்டு ஒழுகும் ஒரு சமயமாய் நிற்கின்றது. இக்காரணத்தினாலேயே நமது தேவாரத் திருமுறைகள் இயற்கைத் தோற்றத்தை வியந்து பாடி அவற்றின் மூலமாய் ஈசுவர தத்துவத்தை விளக்கிநின்றமை காண்கின்றோம். சைவத்திற்கும் ஏனையஉலகச் சமயங்களுக்கும் உலக வாழ்க்கையின் நன்னெறி என்னும் அடிப்படை ஒன்றேயாயினும், அவ்வடிப்படையின் மேல் நிற்கும் கட்டடச் சாமான்களும் கட்டிய முறையும் பலவாறு பேதப்படும். அவற்றை யாதென்று ஆராய்வோம். சைவ சமயத்திற்கும் ஏனைய சமயங்களுக்கும் உள்ள முக்கிய பேதங்களை இருவகையாய்ப் பகுக்கலாம்.

### 3. சைவ இலக்கணமும் ஏனைய சமய இலட்சணமும்

i. சொரூபலக்ஷண பேதம் ஒன்று (Statical aspect).

ii. தடஸ்தலக்ஷண பேதம் மற்றொன்று (Dynamic aspect).

[உபலக்ஷணங்களை (Minor aspects) முக்கியமாய்க் கவனிக்கவேண்டியதில்லை.]

### I

சைவத்தை ஏனைய சமயங்களினின்று வேறு படுத்தும் சொரூபலக்ஷண அம்சங்கள் நான்காம். அவையாவன :—

(i) உற்பத்தி (Crigin).
(ii) வேதம் (Scriptures).
(iii) வழிபடுவோன் (Adherents).
(iv) குரு (Prophet).

அவற்றை முறையே நோக்குவோமாக.

**(i) உற்பத்தி**

எல்லா மதங்களும் அவ்வச் சமயகுரவர்களாலே ஆக்கப் பட்டனவாம். சைவ சமயமோ, நமது சமய குரவர்களால் உண்டாக்கப்பட்டதன்று. அவர்கள் மனதுக்கும் எட்டாத வெகு புராதன உற்பத்தியை உடையதென்று தேவாரம் கூறும்.

“புகையெட்டும், போக்கெட்டும், புலன்களெட்டும்,
பூதலங்களவை யெட்டும், பொழில்க ளெட்டும்,
கலையெட்டுங் காப்பெட்டுங் காட்சியெட்டுங்
கழற்சே வடியடைந்தார் களைகணெட்டும்,
நகையெட்டும் நாளெட்டும், நன்மையெட்டும்
நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்களெட்டும்
திசையெட்டுந் தெரிப்பதற்கு முன்னோ? பின்னோ?
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.”

—அப்பர்.

சிவத்துடன் பிறந்தது சைவம். எனவே, அதன் உற்பத்தி மனோவாக்குக்கு அதீதமான ஆதியையுடையது.

**(ii) நமது வேதம்**

நமது மறைகள் கடவுளை அறிவதற்கு வேண்டிய ஒவ்வொன்றையும் கொடுப்பதாக வீண் இடம்பம் பேசுவதல்ல. நமது சமயகுரவர்கள் ஈசுவர தத்துவத்தில் ஆழ்ந்து அநுபவித்த அவர்கள் சுவானுபூதி (Spiritual experience) விளக்கமே நமது தமிழ் மறைகளாக விருக்கிறது.

“குற்றநீ! குணங்கள்நீ! கூடலால வாயிலாய்!
சுற்றநீ! பிரானுநீ! தொடர்ந்திலங்கு சோதிநீ!
கற்றநூற் கருத்துநீ! யருத்தமின்ப மென்றிவை!
முற்றுநீ! புகழ்ந்துமுன் னுரைப்ப தென்முகம்மனே?

—சம்பந்தர்

தம்மைத் தொடர்ந்திலங்கும் சோதியைப் பற்றிப்பாடியதே, சைவத் திருமுறைகளாகும். இம்மறைகள் “பொருள்” உணர்ந்து நடக்கவேண்டிய வழிகளைக் காட்டும் நூல்களாய் இருக்கின்றனவாயினும், தேவாரத் திருவாசகப் பதிகங்களில் ஒரு செய்யுளும் அறியாதவனும் பரிசுத்த சைவனாய் இருப்பது முடியாத காரியமன்று. மேல்நாட்டுச் சமயவேதங்களைப்போல் தம்மைப் பாராயணம் செய்யாதவன் இச்சமயத்தில் சேராதவனென்று நமது மறைகள் கூறவில்லை.

மற்றும், நமது சமய மறைகள் கோயிலுக்காகவுமே அல்லது பூஜை விதிக்காகவு மென்றுமே எழுதப்பட்டன வல்ல. நமது வாழ்நாட்களிலுள்ள ஒவ்வோர் இயக்கத்தின் பாகத்திலும், அவற்றை நாம் பயன்படுத்துமாறு அவை பாடப்பட்டன. பின்னும் அவை கல்விக்கும் ஆராய்ச்சிக்கும் பயன்படும். ஏனெனில் அவை பொருள் மயக்கும் நடையுடை பெற்றனவல்ல. ஒருவனுக்குத் தமிழ்க் கல்வி சாதாரணமாயிருப்பினும், நமது மறைகளினின்று வாக்கியங்களின் பொருள் நன்கு அறியலாம். அவ்வாக்கிய விஷயங்களோ, வைதிக விஷயங்களே எனக் கூறுவதற்கு மிடமில்லை; வைதிக ஒளியுடன் பல அறிவியற் கல்விகளும் பற்பல கலைஞானங்களும் நமது சமயகுரவர்கள் பெற்றிருந்ததை, ஒருவாறு காட்டித் தத்துவ

ஞானத்தை நடைமுறைக்கையில் பயன்படுத்தும் முறைகளைக் காட்டுகின்றன. நமது குரவர்கள் போதிவாளராதலால் கண்மூடி நம்பிக்கையைக் காட்டினும், சமயத்தில் அவநம்பிக்கையுடையவர்கள் தமது மனச்சாட்சிக்கு விரோதமின்றி நடப்பாராயின், அவரே மேலோரெனக் கொள்வர். கஞ்சி உண்பதற்கு முன்னம் சிவலிங்கத்தின் மேல் கல்லெறிந்த சாக்கியனாரை, அறுபத்து மூன்று அடியார்களில் ஒருவராக நமது சமயம் கொண்டவாறு, எச்சமயத்தில் அதன் விரோதியான புறச்சமயத்தானை ஓர் அடியானெனக் கொள்ளும் வழக்கம் உண்டு?

"விரிவிலா வறிவினர்கள் வேறொரு சமயஞ்செய்தே
எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்றதாகும்"

என்று எச்சமயம் கூறும்? நமது மறைகள் ஒரு தலைப் பட்சமாய் மதக் கொள்கை காட்டாது எம்மதத்திற்கும் சம்மதமா மாறு தனது சித்தாந்தத்தை நிலை நிறுத்தும்.

### (iii) சமய ஒழுக்கத்தினர் (adherents)

நமது சமய அடியார்கள் பிறக்கும்போதே சைவராய்ப் பிறக்கவேண்டுமென்கிற நிபந்தனையில்லை. ஆயினும் அத்தகைய கொள்கை பெற்ற மற்ற மதங்கள் நமது மதத்திற்குக் கட்சி மாற்றி (Conversion) வரவேண்டுமென்று வற்புறுத்துவதுபோல் நமது சமயத்தை ஏற்கும் புறச்சமயத்தானுக்குக் கட்சி மாற்றவேண்டும் என்னும் நிபந்தனைக்குமுட்படுத்துவதில்லை. ஒரு வைணவன், தனது வைணவச் சின்னங்களை மாற்றாது நமது கோயிலுக்கு வரவும், சிவபெருமானைத் துதிக்கவும், தேவார பாராயணம் செய்யவும் கூடும். இதற்கு அறிகுறியாக நமது சைவ சித்தாந்த மகா சமாஜத்திலும் வைணவ சமயத்தினரை அங்கத்தினராக ஏற்றுள்ளோம். மற்றப் புறச்சமயங்கள் சைவ வைணவ சின்னங்களுடையவர்களைத் தமது சமயக் கூட்டத்தில் சேர்த்ததில்லை. இதற்குக் காரணம் என்னவென்று ஆராய்ந்து பார்க்கின் சைவசமயம் வெளி வேடத்தைக் கருதாது உள்ளன்பும் நல்லொழுக்கமுமே கவனிக்குமென்பதும், நமது சமயத்தினர், உலகிலுள்ள எச்சாதி எச்சமயம் உள்ளவரேனும் சைவசமயக் கொள்கைகளை உடையவராய் அச்சீலத்தை ஓம்புவோராயின் சிவனடியார் என எண்ணப்படுவர் என்பதும் வெளியாகும்.

### (iv) நமது சமயகுரவர் (Prophets)

ஏனைய சமயகுரவர்கள் தாங்கள் கடவுளால் அனுப்பப்பட்டவர்களென்றும், அவர் காரியத்தை நிறைவேற்றுமாறு தாங்கள் உதித்தார்களென்றும் தமது சீடர்களுக்கும் உலகத்தாருக்கும் வெளிப்படையாகக் கூறினார்கள். ஆயினும் முடிவில் யுக்தி அநுபவத்திற்கு அவ்வாறு சர்வ வல்லமையுள்ள பெருமான் பிரதிநிதியாய் அவர்கள் உலகக் கடுமையில் சலனமற்று நிற்கவில்லை. அச்சமயகுரவர்கள், நல்லொழுக்கமுள்ள பெரியோர்களாயினும், சாதாரண மனிதர்களால் வழிபடத்தக்க யோக்கியத்தை உடையவர்களாயிருந்தும், அவர் இயற்கைப் பொருளின் இயற்கைத் தத்துவத்தை அவசியமான காலங்களில் மாற்றத்தக்க சக்தி வாய்ந்தவர்கள் அல்லவென்பது அவர்கள் சரித்திரங்களால் வெளியாகிறது. நமது சமயகுரவர்களில், நீற்றறையிலிட்ட அப்பரோ ஏழுநாள் சென்ற பின்னர் வெளிவந்து,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்

மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை யிணையடி நீழலே."

என்று பாடினர். சம்பந்தர் மடத்தைச் சுற்றிச் சமணர் கொளுத்திய தீயை,

"செய்யனே! திருஆலவாய் மேவிய
ஐயனே! அஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்
பையவே சென்று பாண்டியற் காகவே."

என்ற மாத்திரத்தில் பாண்டியனை அத்தீ கொல்லாது வெப்பு நோயாய்ச் சூழ்ந்தது. பிறகு சமணருடன் வாதிக்கும்போது சம்பந்தர் நெருப்பிலிட்ட ஓலை தீயில் அழியாது நின்றதும், ஓடும் நீரிலிட்ட ஓலை வெள்ளத்தை எதிர்த்து எதிர் நோக்கி நெடுந்தூரஞ் சென்றதும் ஆன இத்தகைய அற்புதங்கள் நேர்ந்திராவிடின், சைவ சமயம் பேரின்றி மறைந்து போயிருக்கு மன்றோ? மேல் கூறிய மேல் நாட்டுச் சமய குரவர்கள் தங்களைக் கடவுளின் பிரதிநிதி என்றார்கள். நமது சமய குரவர்களோ இத்தகைய அற்புதஞ் செய்தும் தம்மைக் கடவுள் பிரதிநிதி என்று கூறவில்லை. இவையெல்லாம் இறைவன் செயலென்றனர். சமணர் தந்த விஷம் அமுதானதும், கொலையானை அவரைக் கண்டு நடுங்கிப் பணிந்ததும், கற்பாறை கடலில் சடைப்படகுபோல் அவரைச் சுமந்து சென்றதும் கடவுள் திருநாமத்தின் உச்சரிப்பால் ஏற்பட்டனவென்பர், ஆளுடைய வரசு :—

"துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திடாதே
அஞ்செழுத் தோதி நாளும் அரனடிக் கன்பதாகும்
வஞ்சனைப் பால்சோ றாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமு தாக்கி வைத்தார் நனிபள்ளி யடிகளாரே."

"மலைக் கொளானையை மயக்கிய வல்வினை
நிலைக் கொளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக் கையானை கண்டீர் கடவூரரே."

"கல்லினோ டெனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே."

திருஞான சம்பந்தரும் அப்பரும் இவ்வாறு சமணர் சூழ்ச்சிக்கு இலக்காய் மாளாமையே, அவர்கள் தெய்வத் தன்மை பொருந்தி உலகத்தில் உலாவினார்களென்பதற்குச் சான்றாகும். மேல் நாட்டுச் சமய குரவர்கள் மறித்தது போல் வடநாட்டிலும் டேஜ் பகதூர் (Tej Bahadur) முதலிய சீக்கிய (Sikhs) குரவர்களும், தமது மதத்தை நிறுவினும் புறச் சமயர் கைக்கு இரையாயினராதலால், வேறு சமயங்களிலுள்ள சமய குரவர்களைப்போல் பல ஈனமான மனித தத்துவம் பெறாமல் நமது சமய குரவர்கள் தேகமானது காய சித்தியிலும், சிறந்த உடல் வன்மையாய், மாறாது நின்ற தெய்வத்தன்மையும் வாய்ந்திருந்தது. அவ்வாறிருந்தும், மான் காட்டி மானைப் பிடிப்பதுபோல் சிவபெருமான் இவர்களை உலகத்தில் அனுப்பினர் என்ப

தற்கு அத்தாட்சியாய், உலகத்திலுள்ள பாமர ஜனங்களுடன் யாதொரு ஆடம்பரமுமின்றி சகோதர வாஞ்சனையாய் உலவியதுடன்,

"எவரேனும் தாமாக விலாடத் திட்ட
 திருநீறுஞ் சாதனமும் கண்டா லுள்கி
யுவராதே யவரவரைக் கண்ட போது
 உகந்தடிமைத் திறநினைந்து அங்குவந்து நோக்கி
இவர்தேவர், அவர்தேவர், என்றுசொல்லி
 இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
 கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே."

என்னும் இலக்கணம் பொருந்தி இருந்தனர். ஆயினும் இவர்கள் ஏழைகளல்ல. புகலி வேந்தன் தந்தை சிவபாத விருதையார் சீர்காழிக்குத் தலைவராகக் காணப்படுகின்றார். இவர்குடி சீர்காழிக்குத் தலைமை வாய்ந்திராவிடில் தம்மை "மன்னன்" என்றும், "கோன்" என்றும், "வேந்தன்" என்றும், தமது திருக்கடைக் காப்பில் கூறார் என்பது திண்ணம். அப்பர் குடும்பத்தை உற்று நோக்கில் அவரும் அக்காலத்திய பெரிய பிரபு என்றே காட்டுகின்றது. அவர் தமக்கையை மணக்கக் கலிப்பகையாகிய அரசன் சேனாபதி நிச்சயித்திருந்தாரெனில் சாதாரண குடும்பமாய் அப்பர் இல்லம் இருந்திராதென்பது திண்ணம். திருமறுமாற்றத் திருத்தாண்டகம் பல்லவன் மந்திரி முதலானோரைப் பார்த்து அளித்தவிடை. இது தன்மைப் பன்மையிலிருக்கிறது. "யாம்," "நாம்" என்று கூறுவதற்கு, உலக அந்தஸ்து முக்கியமானது. வைதிக ஒழுங்கில், "அடியேன்," "நாயேன்" என்றவர் லௌகிக ஒழுங்கில், "யாம் வாரோம்" "நாம் குடியல்லோம்," "நாம் இடையோம்," என்றதால், இத்தகைய மாற்றங்கள் உலகத்தில் அவர் பெற்றிருந்த பதவியையே காட்டுகின்றன. இதனால் அப்பரும் அரச அந்தஸ்து அல்லது அதற்குத் தக்க பிரபுத் தன்மை வாய்ந்தவரென்பது நிச்சயம். சுந்தரரை உற்றுநோக்கின் அவரும் அரசகுமாரனாக வளர்ந்தாரென்பதும், தமிழ்நாட்டு மூவேந்தரும் இவரைப்போற்றி நிற்கத் திருப்பரங்குன்றம் முதலிய தலயாத்திரை செய்தாரென்பதும் காணப்படுகின்றன. திருநாகைக் காரோணத்தில், சுந்தரர் முத்தாரம், வைரக்கோவை, கஸ்தூரி சாந்து, காற்றனைய கடும்பரிமா இவை சிவபெருமானைத் தரவேண்டுமென்று வேண்டியதால், அவர் இவையாவும் உபயோகித்த பெரிய பிரபு என்பதற்குச் சந்தேகம் உண்டோ? ஆதலால் நமது சமயகுரவர்கள் ஏழைகளல்லர். அருட்செல்வம் பொருட்செல்வம் இரண்டும் வாய்ந்தவரென்று வெளியாகிறது. ஆயினும், அவர்கள் தாங்கள் கடவுளிடத்திலிருந்து வந்தவர்கள் என்று ஒருவருக்கும் வெளியில் பகர்ந்தவர்களல்லர். மற்றவர்களைப்போலவே, அவர்களும் உலக மாயையில் வருந்துவதுபோல் வருந்தி, மெய்க்கிலேயான பரம்பொருளின் பேரின்பம் அருளவேண்டுமென்று சிவபெருமானைத் தனியேயும் கணங்களோடும் துதிக்கலாயினர்.

எனவே, சைவசமயமானது மற்றச் சமயங்களினின்று முதலில் தொன்மையில் பேதப்படும். பிறகு மறைகளின் இலக்கணத்தால் பேதப்படும். அதாவது ஏனைய சமய மறைகளைப்போல் தம்மையே நம்பவேண்டுமென்று கூறாமல் தோத்திர முறைகளாய் இம்மை மறுமைக்கு இன்றியமையாத மேலான ஞானத்தை ஓதுவிப்பது மன்றித் தமது அடியார்களைத் தனித்

தனியே ஆராய்ச்சித் துறையில் மூழ்கி ஒவ்வொன்றும் அநுபவத்தால் தேர்ந்து தெளிய வேண்டுமென்று கூறும்.

"பாறிஞய் பாவிநெஞ்சே! பன்றிபோ லளற்றிற் பட்டுத்
தேறிநீ நினைதியாயிற் சிவகதி திண்ண மாகும்;
ஊறலே யுவர்ப்புநாறி யுதிரமே யொழுகும் பாசக்
கூறையால் மூடப்பட்டும், சோலமாக் கருதிஞயே!"

என்ருர் அப்பர். இவ்வாறு மற்று எந்த மறையும் போதித்ததில்லை. கண்மூடி நம்பிக்கையே வேண்டுமென்று கட்டாயப்படுத்தும், புறச்சமய மறைகள். நமது சமய குரவர்களோ அறிவியல் துறையில் அறிவியல் இயந்திர ரசாயன சாலைகளில் வேலைசெய்யும் ஆசிரியர்கள்போல், இயற்கைத் தத்துவ அறிவியல் ஞானம் அற்புதமாக வெளிப்படுத்துகின்றனர். நமது மதத்தில் சேர்ந்தவர்கள் வெளிச் சைவநாமம் பெறவேண்டிய அவசியமில்லை என்பது முன்னரே காட்டினேம். ஆகையால், ஏனைய சமயங்களைப்போல் சைவரில் வகுப்புகள் கிடையா. சைவரில் வீர சைவரென்பவரும், பொதுச் சைவர்களுக்கு விரோதமான கட்சியரல்ல. வைணவத்தில் வடகலை, தென்கலை போல,சைவத்தில் வெறும்சைவம் வீரசைவம் என்னும் பேதமில்லை.ரோமன் காதிலிக் சமயத்தில் (Roman Catholics) ஜெசுயிட் (Jesuits) இருப்பது போல் சைவத்தில் வீரசைவம் அமையும். இவையே சைவத்திற்கும் ஏனைய சமயங்களுக்கும் உள்ள சொரூப லக்ஷண பேதங்களாம்.

## II

இனி தடஸ்த லக்ஷண பேதங்களை கவனிப்போம். ஒவ்வொரு சமயத்திலும், சுவர்க்கம் (Heaven), நரகம் (Hell), கடவுள் (God), முத்தி (Salvation), என்கின்ற நால்வகை தடஸ்த முகங்கள் உள. இவை சுருதி (authority of Scriptures) யுக்தி (Logical basis of discussion), அநுபவம் (Practical and concrete experience) இம்மூன்றுக்கும் பொருத்தமாகக் காட்டக்கூடிய சமயம், நமது சமயம் ஒன்றே. எல்லா மதங்களிலும் நரகமானது கடவுள் துஷ்டர்களைத் தண்டிக்கச் சிருஷ்டித்த இடமெனக் கொள்ளப்படும். நமது சமயமோ நரகத்தைப்பற்றிப் பேசுகின்றதாயினும், அது அன்பே உருவான சிவத்தினுடைய சிருஷ்டி யென்று எண்ணவில்லை. நமது கடவுளுக்குத் தண்டனை விதிக்கும் நியாயாதிபதி வேலையையும், தண்டனை நிறைவேற்றும் சிறைச்சாலைத் தலைவன் வேலையையும், நமது சமயம் கொடுக்கவில்லை. நரகம் சிவன் சிருஷ்டி யன்று; ஜீவசிருஷ்டி எனப்படும். இங்கும், சிவன் பேயோடாடியாய் ஜீவனுடைய பாவத்தை நீக்க முயலும்.

"பேயாயின பாடப்பெரு நடமாடிய பெருமான்,
வேயாயின தோளிக்கொரு பாகம்மிக உடையான்
தாயாகிய உலகங்களை நிலைபேறுசெய் தலைவன்
நேயாடிய பெருமானிடம் நெய்தான மென்னீரே" —சம்பந்தர்.

சைவ சமயத்தில், மீளாநரகம் என்பதே கிடையாது. அத்தகைய நரகத்திற்கு ஆளாக்க வேண்டிய இராவணனையும், சிவபெருமான் தம்மைத் துதித்தவுடன் மன்னித்து அவன் வேண்டும் வரங்கள் ஈந்தார் என்பது, புராண இதிகாசங்களின் வரலாறும்.

மற்றும், நரகமானது, நமது மதத்தில் பாவிகள் உறையும் வேறு உலகமென்று எண்ணவில்லை. ஒருவன் செய்த குற்றத்திற்கு அவனை அதை மறந்து பல காலத்திற்குப் பிறகு தண்டிப்பதில், நியாயம் பொருந்தாது. குற்றம் செய்த காலத்திற்கும், தண்டனை விதிக்கும் காலத்திற்கும் இடையே ஒருவன் நல்ல நடவடிக்கையுடன் நற்காரியங்கள் செய்து வாழ்ந்திருக்கலாம். ஆகையால் தண்டனை கொடுப்பதாயின் குற்றம் செய்த உடனே தாமதமின்றிக் கொடுக்கவேண்டியதாகும். எல்லாம் அறிந்த இறைவனுக்கு சாட்சிவேண்டியதில்லை. ஆதலால் அவர் குற்றத்துக்குத் தண்டனை பல காலத்துக்குப் பின்னர் கொடுக்கின்றார் என்பது யுத்திக்குப் பொருந்தாததாம். எனவே, நரகம் ஒவ்வொரு ஜீவனும் தன் தன் பாவத்தினால் சிருஷ்டித்துக் கொள்வதேயன்றிச் சிவன் செயலால் வருவதன்று. அது இம்மையிலே பெரும்பாலும் சம்பவிக்கும்.

> "குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள்சூழ்ந்த களவெலாம்
> செற்றொருவரைச் செய்ததீமைகள் இம்மையேவரும் திண்ணமே:
> மற்றொருவரைப் பற்றிலேன்மற வாதெழுமட நெஞ்சமே
> புற்றாவுடை பெற்றமேறி புறம்பயந்தொழப் போதுமே"
>
> —சுந்தரர்.

அவ்வாறு சம்பவிக்காது, அச்சிவனுக்கு மரணம் சம்பவிக்குமாயின், அவ்வினை அச்சிவனை மறுசன்மத்தில் தொடரும். இதனால், இம்மையில் சொர்க்க நரகங்கள் உலக வாழ்க்கையில் கலந்திருப்பதை நாம் பிரத்தியட்சமாய்க் காண்கின்றோம். சிறைச்சாலையிலுள்ள குற்றவாளி, நரகத்தை அநுபவிக்கின்றான். அவனுடன் சதாவிருந்தும், எல்லாக் குற்றவாளிக்கும் தண்டனைகளை நிறைவேற்றும் அச்சாலைத் தலைவனோ, பெரிய ஊதியம் பெற்றுச் சுகமான இல்வாழ்க்கை நடத்துகின்றான். எனவே, ஒரே இடமானது, ஒருவனுக்கு நரகமாயும், மற்றொருவனுக்குப் பொன்னகராயுமிருக்கின்றது. சிறைச்சாலையை விட்டு நமது இல்லத்தை நோக்குவோம்; தாய் தந்தையர் வருந்துவதும் உழைப்பு தீராதிருப்பதுமாய் ஒயாக்கஷ்டஸ்திதியிலிருக்க, அவர்கள் மைந்தர்கள் ஒரு கவலையுமின்றிச் சுகத்தை அநுபவிப்பது நாம் காண்கின்றோமன்றோ? இவ்வாறு சுவர்க்கமும் நரகமும், நிலைமைக்கும், பார்வைக்கும் ஏற்றவாறு மாறுகின்றன. சுவர்க்கத்திலுள்ளவர்களை இறுமாப்புடன் காலக்ஷேபம் செய்யவொட்டாமலும், நரகவேதனைப் படுவோரை வருந்தவொட்டாமலும், நமது சமயமானது மனதைக் குடையும் ஒரு அற்புத யந்திரம் போலிருக்கின்றது. இதுவே, சைவ சமயத்தின் பெருந்தொழிலாகும்.

இனிக் கடவுளும், முத்தியும் என்னும் விஷயங்களின் சிறப்பு அங்கங்களைக் கவனிப்போம்: நமது சமயத்தில் பொன்னுலகம் முத்தி என்று கருதப்படவில்லை. அதை இந்திரலோகமென்றும், உலகத்திலுள்ள இன்பங்களைப் பன்மடங்கு அதிகரித்து அநுபவிக்க அது இடமென்றும், பலகாலம் அங்கு வசிக்க அமுதபான முண்டென்றும், வேண்டும் பொருள்களைக் கொடுக்கக் கற்பகத்தரு உண்டென்றும் இன்னும் பற்பல தேவ போகங்களைப் பெற்ற பொன்னுலகமும் அழியத்தக்கதென்றும் கூறும்; அவற்றைப் பொருளென எண்ணலாகாதென்றும் நமது மறைகள் கூறும். எனவே, சைவ சமயத்தின்கண், முத்தியெனக் கொள்ளப்பட்டது யாது? எனின், சைவத்தில் முத்தியாவது, "சாயுச்சியம்" (Perfect union of the individual with the Universal Soul) அதாவது, சிவத்தன்மை வாய்ந்து அன்பே உருவமாய்த்

திகழ்தல்; எனவே சைவமுத்தியானது நான் எனது என்னும் பற்றறுத்த போதே தான் என்று வந்து நின்ற இன்பமாய்த் திகழ்வதாம்.

“ஊனாகி உயிராகி அதனுள் நின்ற
உணர்வாகி பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேது மறியாமே என்னுள் வந்து
நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்
தேனாருங் கொன்றையனே நின்றியூராய்
திருவானைக் காவிலுறை சிவனே! ஞானம்
ஆனாயுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்ல கண்டங் கொண்டடியேன் என்செய்கேனே”

இம்முத்தியில், எல்லாம் வல்ல இறைவன் சச்சிதாநந்த சொரூபமாய் விளங்குகின்றான்; சத்திலக்கணமாய் ஒய்வில்லா நடனம், அம்பலத்தில் செய்கின்றான். அந்நடனத்தாலே உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருள்களி னியக்கமும் நிலைகுலையாது நிற்கின்றது. நமக்குக் காணப்படும் அசைவற்ற பொருள்களும் ஒருவகை இயக்கம் பெற்றுச் செல்லா நிற்கும். நமது கோளங்கள் சூரியனைச் சுற்றி ஓடுவது போல் சூக்கும அணுவிலுள்ள காரண அணுக்களின் ஓட்டமும் நடராஜப் பெருமான் நடனத்தின் காரிய மாகவே காணப்படுகின்றது. ஒரு நிமிஷமாகினும் அம்பலக் கூத்து நிற்கு மாயின், அணுமுதல் அண்டங்கள் வரையிலுள்ள எல்லாக் கூத்துகளும் நின்று விடும். இக்கூத்தைப் பதஞ்சலி முனிவரைப்போல் கண்டு களித்து, தான் என்பதை முற்றும் மறந்து அதுவே தானாய் நிற்கும் ஆநந்த வடிவமே சை வத்தின் முத்தியாம். எனவே, சிவபெருமான் எங்கும் நிறைந்து இன்பம் ஊற்றுவதை ஜீவன் முத்தருக்கு அங்கங்கு உள்ளவிடத்திலேயே அனுப விப்பார். இவ்வாநந்தம் நித்திரையிலுள்ள மூடவின்பமன்று. அறிவுடன் கூடிய இன்பமாதலால் சித்தானந்தமாகும்.

கடவுளானவர், ஒவ்வொரு உயிருக்கும் உயிராய் நிற்பது ஒரு முக மாயும்; உலகத்தில் எள்ளில் எண்ணெய்போற் கலந்திருப்பது மற்றொரு முக மாயும்; அடியார்கள் “எந்தாய்” என்று அழைத்த மாத்திரத்திலேயே ‘இருந்தேன்’’ என வெளிவரும் லிங்க மூர்த்தம் ஒரு முகமாயும்; சுடலையில் பேயோடாடுவது மற்றொரு முகமாயும்; கயிலையில் உமையவளோடு இருப் பது பின்னும் ஒரு முகமாயும், ஆக, ஐவகை முகங்களான பஞ்சான னாய்ப், பஞ்சாக்கர சொரூபனாய் விளங்குவான். இதனுடன் பேதமின்றி அறிவுடன் அதுவே தானாய் நிற்கும் நிலை, முத்தி நிலை என்று மேலோர் கூறுவர். அத்தகைய முத்தி எவ்வாறு பெறலாமெனின் மும்மல சம்பந்த முழுமையுமற்று அன்பே வடிவாய்த் திகழ்ந்தாலன்றி அந்நிலையை எய்துவ தாகாது. அவ்வாறு அந்நிலை எய்தியவர் மீள்வதில்லை. அந்நிலையில் தீவினை யற்று, புலன்கள் பந்தம் அற்று, ஒன்றிய மனத்துடன் ஞான வடிவாய் உள் ளம் திகழும். இந்நிலையே முத்தி நிலை என்பது அப்பர் பாசுரத்தான் வெளி யாகும்.

“வென்றானைப் புலனைந்து மென்தீவினை
கொன்றானைக் குணத்தாலே வணங்கிட
நன்றானம் மனம்வைத்திடு ஞானமாம்
ஒன்றானைக்கண்டு கொண்டதென் னுள்ளமே.”

ஆகையால், நமது சமயத்தில் முத்தி என்னப்பட்டது இறந்தபின் பெறும் பேறன்று. ஒவ்வொரு ஜீவனும் பிரத்தியட்சத்தில் இம்மையி

லேயே பெறும் பேருகும். ஏனைய சமயங்களோ மரணத்துக்கு முன்னர் முத்தி உண்டென்று கூறுவதில்லை. சைவசமயம் ஒன்றே உயிருள்ளபோதே முத்தியை வற்புறுத்தி விளக்கும். அதைத் தாயுமானவர் தன் அநுபவத்தினின்றும் பின்வரும் செய்யுளால் விளக்குகின்றார்:—

"யானெனல் காணேன் பூரண நிறைவில்
யாதினு மிருந்த பேரொளி நீ
தானென நிற்கும் சமத்துற வென்னைத்
தன்னவ ளுக்கவும் தகுங்காண்
வானென வயங்கி யொன்றிரண் டென்ளு
மார்க்கமா நெறிதந்து மாருத்
தேனென ருசித்து என்பரைக் கலந்த
செல்வமே சிற்பர சிவமே."

இவ்வாறு சைவ சமயமானது தடஸ்த லக்ஷணத்திலும் ஏனைய சமயங்களினின்றும் பேதப்படுவது காண்க. இதன் முக்கிய நோக்கமாவது காகத்தைப் போல் உறவுடன் யாவரையும் அருட் பிரவாகத்தை உண்ண அழைப்பதுவேயாம். இக்கருத்தையே முன் வைத்துச் சிவபெருமான் பேயோடாடுகின்ருர். அவருடன் சம்பந்தப்படுவதே அன்பின் தொழிலாம். இதில் வஞ்சகம், பொருமை முதலியவற்றிற்கு இடமேயில்லை. உயிர்த் துணைவனை கற்புறு மனைவி கைப்பற்றி வாழ்நாள் நடத்துவது போலும், முன்னிலையேயன்றித் தன்மை ஒழித்த தத்துவமாகும். இதைப் புகலி வேந்தர் திருக் கழுமலத் திருப்பதிகம் ஒன்றில் மிகவும் அழகாகப் பின் வருமாறு விளக்குகின்ருர்:

"பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன் கள்வாய்ப்
பாலே போகா மேகாவாப் பகையறும் வகைநினையார்
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக்கு ணங்கள் வாய்
மூடாவூடா நாலந்தக் கரணமும் ஒருநெறியாய்ச்
சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப் பரம்பொருள்
சேர்வார் தாமே தானுகச் செயுமவன் உறையுமிடங்
கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்
காலே யோவா தார்மேவுங் கழுமல வளநகரே." —சம்பந்தர்.

அறிக்கை :— திருநாவலூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகட்குக் கும்பாபிஷேகம் நாளது தைமீ கஅ௨ திங்கட்கிழமை நடைபெறும். ஆங்கு சமாஜப் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெறும்.

பிரசபை நிகழ்ச்சிகள் :—தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் 49-ம் ஆண்டு நிறை விழாவும், மதுரை சைவசித்தாந்த சமாஜத்தின் முதலாண்டு நிறைவிழாவும் சைவத்திருவாளர் - டி. கே. சிதம்பரநாதமுதலியார் (H. R. E. Board Commissioner) அவர்கள் தலைமையில் நடைபெற்றன. விவரங்கள் அடுத்த இதழில் வெளிவரும்.

# சைவசித்தாந்த மகா சமாஜ

# இருபத்தேழாம் ஆண்டு நிறைவு விழா

[G. கலியாணம், உதவிக் காரியதரிசி, சைவசித்தாந்த மகா சமாஜம்.]

இந்த சமாஜத்தின் 27-ஆம் ஆண்டு விழாவும், சைவர் மகாநாடும், சைவ இளைஞர் மகாநாடும், சைவ மங்கையர் மகாநாடும், கூவம் என்று வழங்கும் திருவிற்கோலத்தில், கூவம் சைவசித்தாந்த சபையின் ஆதரவில், 1932-ம் ஆண்டு, டிசம்பர் மாதம் 30௳ வெள்ளிக்கிழமை முதல் மூன்று நாட்கள் வரையில் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

முதல்நாள் வெள்ளிக்கிழமை (30-12-32) மாலை சுமார் 4-மணிக்குத் திருக்கோயில் வழிபாடும், தேவார பாராயணமும் நடந்தபின், மகாநாட்டுத் தலைவர் சைவத் திருவாளர் - மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ. அவர்களும் சமாஜத்தினரும் மேள வாத்தியத்துடன் ஊர்வலமாக அழைக்கப்பட்டு, கூவம் தாலூக்கா போர்டு பள்ளிக்கூடத்திற்குச் சென்றனர். திரு. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தமிழ்மறை யோத, $4\frac{1}{2}$ மணிக்குக்கூட்டம் ஆரம்பித்தது. சமாஜ அமைச்சர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. ஏ., பி. எல். அவர்கள், முன் மொழிய, திருவாளர்கள் கூவம் வீ. துரைசாமி முதலியார், தூத்துக்குடி ந. சிவகுருநாத பிள்ளை, வித்துவான் மறை. திருநாவுக்கரசு, G. கலியாணம், பி. ஏ., Dip. Econ. ஆகியவர்கள் பின்மொழிய, தலைவர் அவர்கள் அவைத்தலைமை பூண்டார்கள். வரவேற்புப் பத்திரம், ஆண்டு அறிக்கைப் பத்திரம் வாசித்து அங்கீகரிக்கப்பட்டன. இவைகள் மகாநாட்டில் வழங்கப்பட்டன. பின்னர் தலைவரவர்கள் பேருரை நிகழ்ந்தது. (இதனை மற்ரோரிடத்திற் காண்க.) பின்னர் திருக்குறள் விளக்க உரையாசிரியர் திரு. கி. குப்புச்சாமி முதலியார் அவர்கள் "திருவெம்பாவை" என்பதுபற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். திருவெம்பாவை என்பதன் பொருளும், அது மணிவாசகப் பெருமான் திருவண்ணாமலையில் மார்கழித் திங்களில் நீராடச் சென்ற பெண்களுக்காகப் பாடியதாகவும், முதல் எட்டுப் பாக்களில் நவசத்தி எழுந்ததைப் பற்றியும், பின்னர் ஆண்டவன் எவ்வித தகுதி யுடையான் என்பதையும், எவ்வித நீரில் எப்படி நீராடவேண்டும் என்பதையும், எல்லாக் காப்பியங்களிலும் கூறுவதுபோல், மழைப்பொழிவு அதாவது ஆண்டவன் திருவருட் பொழிவு கூறப்படுகிறதென்றும், அப்பாட்டுகளின் உள்ளுரைப் பொருள்களை மிகவும் அழகாக எடுத்துரைத்தார்கள்.

தூத்துக்குடி திரு. ந. சிவகுருநாத பிள்ளை அவர்கள் "சிவஞான சித்தி" என்னும் பொருள்பற்றி அரிய விரிவுரை ஆற்றினார்கள். சிவஞான சித்தியார் சிவஞானபோதத்தின் வழிநூலென்றும், பரபக்கத்தில் பல சமய உண்மைகளையும் அதன் மறுப்புகளையும், சுபக்கத்தில் பசு பதி பாச இலக்கணங்களையும், வேதாகமங்களில் விளங்காத உண்மைகளையும் விளக்கும் ஞானநூல் 'சித்தியார் என்றும் இனிமையாய்ப் பேசினார்கள்.

பின்னர், வித்வான் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்கள் "மெய்ப்பொருள் நாயனர்" என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்துங்கால் ஈசன் அடையாளங்களுடையவர்கள் யாரே யாயினும் மெய்யடியாராக மெய்ப்பொருள் நாயனர் எண்ணினரென்றும், திருநீறு அணிந்த எல்லாரையும் ஒன்ருகக் கருதவேண்டும் என்றும் மிகவும் விளக்கமாக எடுத்துச்சொன்னார்கள். தலைவர் தம் கருத்துரை பேசியபின் இரவு $8\frac{1}{2}$ மணிக்குக் கூட்டம் இனிது முடிந்தது.

இரண்டாம் நாள் சனிக்கிழமை (31-12-32) காலை சுமார் 9 மணிக்கு திருக்கோயில் வழிபாடு நடந்தபின், திருவாசக முழக்கத்துடன் சைவ இளை

ஞர் மகாநாட்டுத் தலைவர், திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயடு அவர்கள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டுக் கூட்டம் ஆரம்பித்தது. அமைச்சர் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்கள் வரவேற்புரையின்பின், தலைவர் தம் பேருரையை நிகழ்த்தினார்கள். (இது அடுத்த இதழில் வெளிவரும்.) பின்னர், திரு. G. கலியாணம் பி. ஏ. Dip. Ec. அவர்கள், "தந்தைதாய்ப் பேண்" என்பது பற்றியும், புலால் மறுத்தல் சங்கச் சொற்பொழிவாளர் திரு. S. S. பெருமாள் பி. ஏ. அவர்கள், "இளைஞர் தற்போதைய கடமை" என்பதுபற்றியும், திரு. துரைக்கண்ணன் அவர்கள் "திருக்கோயில் வழிபாடு" என்பதுபற்றியும், திரு. மாணிக்கவாசகம் "இளைஞர் தொண்டு" என்பதுபற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். தலைவர் தம் முடிவுரையில் தீண்டாமையால் உண்டாகும் தீமைகளைப்பற்றி மிக விரிவாக எடுத்துச் சொன்னார்கள்.

தேவாரப் பரிசுப்போட்டிச் சீட்டுகள் பகிரங்கமாகக் குலுக்கப்பட்டு ஆறு பரிசுகள் எடுக்கப்பட்டன. இப்பரிசுச் சீட்டுக்களின் எண்கள் முறையே 333, 545, 53, 448, 436, 221 ஆகும்.

மாலை 2 மணிக்குமேல் மங்கையர்மகாநாடு ஸ்ரீமதி. பண்டிதை. கிருஷ்ணவேணி யம்மையார் தலைமையில் நடந்தது. ஸ்ரீமதி. பத்மாவதி யம்மையார் முதலியோர் பேசினார்கள். கூட்டத்திற்குத் திரளான பெண்மக்கள் வந்திருந்தார்கள்.

பின்னர் 4½ மணிக்குச் சமாஜக்கூட்டம் தொடங்கப்பட்டது. கடவுள் வாழ்த்துக்குப்பின், அறநிலையப் பாதுகாப்பு மன்ற அமைச்சர், திரு. சி. எஸ். சுவாமிநாதமுதலியார் பி. ஏ., அவர்கள், "சமய உழைப்பும், வயிற்றுப்பிழைப்பும்" என்பதுபற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். சமய உழைப்பையும், வயிற்றுப் பிழைப்பையும் விட்டுவிடக் கூடாதென்றும், வெளிவேடமின்றிச் சமய உழைப்பு செய்யமுடியும் என்றும், வயிற்றுப் பிழைப்பிலேயே கடவுள் ஒருமைப்பாடு ஏற்பட்டு விடுகிறதென்றும் பேசினார்கள்.

இராணிமேரிக் கல்லூரி ஆசிரியர் ஸ்ரீமதி. இராஜேஸ்வரி அம்மாள் எம். ஏ., எல். டி., அவர்கள், "சைவ சமயத்தின் சிறப்பியல்பு" என்பதுபற்றி விரிவுரையாற்றினார்கள். வேறு சமயங்களில் இல்லாத சில சிறப்பியல்புகளைச் சைவ சமயம் உடையதா யிருக்கிறதென்பதை மிகவும் விளக்கமாக எடுத்துச் சொன்னார்கள். (இதன் சுருக்கத்தை மற்றோரிடத்திற் காண்க.)

பின்னர் வழக்கறிஞர், திரு. ஈ. ந. தணிகாசல முதலியார் பி. ஏ., பி. எல்., அவர்கள், "சம்பந்தர் பதிக அமைப்பு" என்னும் பொருள்பற்றி அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதில், சம்பந்தர் பதிகத்தில் முதல் ஏழு பாட்டுகள் ஏழு உலகங்களைக் குறிக்கும் என்றும், அடுத்த மூன்று பாட்டுகள் ஆணவம், கன்மம், மாயை இவைகளைக் குறிக்கும் என்றும், ஒரு விளக்கப் படத்துடன் பல ஆழ்ந்த கருத்துக்களை எடுத்துக்காட்டினார்கள்.

பிறகு "நவசக்தி" ஆசிரியர், திருவா்ளர். திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள், 'கண்ணப்பர்' என்னும் பொருள்பற்றி சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். கண்ணப்பர், நாயன்மார்களில் தொன்மையானவர் என்றும், மனிதர்களல்லாத ஜீவராசிகட்கும் ஆண்டவன் அருள் செய்வான் என்றும், திருவருள் நெறிக்கு உயர்வு, தாழ்வு இல்லையென்றும், கடவுளுக்குரிய பூசை அன்பேயென்றும் மிகவும் இனிமையாகப் பேசினார்கள்.

அதற்குப் பிறகு, திரு. பு. சமரபுரி முதலியார் அவர்கள் "மாணிக்கவாசகர்" என்பதுபற்றி விரிவுரை யாற்றினார்கள். சிவன், மேலாம் கடவுள் என்பதையும், ஆன்மா இறைவனுக்கு அன்பு செய்யும்பொழுது பித்துக் கொண்டு விடுகிறதென்றும், அது ஜீவத்தன்மை யொழிந்து சிவத்தன்மை

அடைவதையும், உலக இன்பத்தைப் பாடாமல் ஆண்டவனையே பாடவேண்டும் என்பதையும் திருவாசகத்தின் பல பாட்டுகளை மேற்கோளாகக் காட்டி, பாட்டுகளை இனிமையாகப் பாடி யாவரையும் மகிழ்வித்தார்கள்.

தலைவர் தம் கருத்துரையில் உடல், உயிர் என்ற இரண்டில் ஒன்றில்லாமல் மற்றது விளங்காதென்றும், சாதி உடலைப்பற்றியதென்றும், சமயம் உயிரைப்பற்றியதென்றும் கூறினார்கள். இரவு 8½ மணிக்குக் கூட்டம் இனிது முடிந்தது.

மூன்றும் நாள் ஞாயிற்றுக்கிழமை (1-1-33) காலை 9 மணிக்குக் கூட்டம் ஆரம்பித்தது. முதலில் காரியக்கூட்டம் நடைபெற்றது. திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள் ஆங்கிலத்திலுள்ள சமய சம்பந்தமான அரிய விஷயங்களைத் தமிழில் மொழிபெயர்த்துத் தருவதாகவும், திரு. ம. பாலசுப்பிரமணியமுதலியார் அவர்கள் மூன்று ஆண்டுகளுக்குள் சைவசமயத்தைப்பற்றி ஒருநூல் ஆங்கிலத்தில் இயற்றித் தருவதாகவும், திரு. மறை. திருநாவுக்கரசு அவர்கள் "சித்தாந்தம்" பத்திரிகைக்கு நூறு சந்தாதாரர்களைச் சேர்த்துத் தருவதாகவும், திரு. தி. கு. கி. நாராயணசாமிநாயடு அவர்கள் சமய சம்பந்தமான கல்வெட்டுகளைப் படியெடுத்துக் கொடுப்பதாகவும், திரு. மாணிக்கவாசகம் அவர்கள் சமாஜவெளியீடுகளை வீடுதொறும் சென்று விற்பனை செய்வதாகவும் வாக்களித்தார்கள்.

பின்னர் திரு. இராவ்சாகிப். கனகசபைப் பிள்ளையவர்கள், "கிராமநூல் நிலையங்களைப்" பற்றி நீண்டதொரு சொற்பொழிவு செய்தார்கள். பெங்களூர் சமரசவேத சன்மார்க்க சங்கத்தினர் அனுப்பிய "திருமுருகாற்றுப்படை"யின் பிரதிகள் யாவர்க்கும் இலவசமாக வழங்கப்பட்டன. தீண்டாமை விலக்கின் காரணங்களை திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்களும், தீண்டாமையுண்மையின் காரணங்களை திரு. கி. குப்புச்சாமி முதலியார் அவர்களும் எழுதி வெளியிட்ட பிறகு ஒரு மாதத்தில் சமாஜ அங்கத்தினர் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. பிறகு உத்தியோகஸ்தர் தேர்தல் நடந்தது. (இதன் முடிவு அடுத்த இதழில் வெளிவரும்.) பிறகு, காலைக்கூட்டம் சுமார் 12¾ மணிக்கு முடிந்தது.

மாலை 2¼ மணிக்கு மறுபடியும் கூட்டம் ஆரம்பித்தது. கடவுள் வாழ்த்துக்குப் பின், திரு. கே. வைத்தியநாதமுதலியார் அவர்கள் "தீண்டாமை" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். தீண்டாமை ஆதியில் எப்படி ஏற்பட்டதென்றும், அறிவால்தான் மக்கள் உயர்குலம், தாழ்குலம் ஏற்பட்டிருக்கவேண்டும் என்றும் பேசினார்கள்.

பிறகு கீழ்வரும் தீர்மானங்கள் நிறைவேறின:—

(1) அடுத்த தேவாரப் பதிப்புகளைச் சேக்கிழார் அருளிய காலவரிசை முறையில் செப்பங்களோடு பதிப்பிக்கவேண்டும்.

(2) இச்சமாஜம் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆதரவிலுள்ள சங்கீத கலாசாலையில் தேவார திருவாசக இசைநூல்களைப் பாடத்திற்குப் புறக்கணிதத்தைக் குறித்து வருந்துவதோடு, தமிழ் நாட்டில் ஏற்பட்ட இந்தபல்கலைக் கழகத்தில் இவைகட்குத் தக்க இடம் கொடுத்துக் கற்பிக்க வேண்டுகிறது. இத்தீர்மானத்தை அக்கழகம் கண்ட தலைவர்க்கும், கழக உட்குழுவினர்க்கும் (Syndicate members) அனுப்ப சமாஜ அமைச்சர்க்கு அனுமதி தருகிறது. (இதைப்பற்றிக் கவனிப்பதாக சமாஜத்துக்கு விஜயம் செய்த திரு. டி. சிவராமசேதுப் பிள்ளையவர்கள் கூறினார்கள்.)

(3) கோயில்களில் படி எடுக்கப்படும் கல்வெட்டுகளிலுள்ள சமயக் குறிப்புகளை அறிந்துகொள்ள வேண்டியிருத்தலின் சாசன சாலையில் சாசனங்களைப் பார்க்கவும், முக்கியமான சாசனங்களை வெளியிடவும் அரசாங்க

சாசனசாலைத் தலைவர் அவர்களை அனுமதிகொடுக்குமாறு இச்சமாஜம் கேட்டுக் கொள்கிறது.

அதன் பிறகு சிற்றார் போதனுமுறைக் கல்லூரித் தலைமை ஆசிரியர், திரு. ச.சச்சிதாநந்தம் பிள்ளை அவர்கள், பி. ஏ. எல். டி "நால்வர் வாழ்க்கையும் நாட்டு முன்னேற்றமும்" என்பதுபற்றி நீண்டதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். நம் நாட்டின் தற்காலநிலையையும், நால்வர் காலத்து ஜன சமூக நிலையையும், நால்வர் அருங்குணங்களையும், சிவபக்தி ஏற்பட்ட காலத்தில் பிறப்புக்கட்டு உடைய வேண்டும் என்றும், சாதி சமயத்துள் மாயும், சமயம் சுவானுபூதியில் மாயும் என்றும், நால்வர்கள் தங்கள் காலத்துச்சமயச் சிக்கல்களை நீக்கியது போல் நாமும் நம்காலத்துச் சிக்கல்களை விலக்க முயல வேண்டும் என்றும் இனிமையாக எடுத்துரைத்தார்கள்.

"மூவர் தமிழும் முத்தமிழும்" என்னும் பொருள் பற்றிக் குடவாயில், போர்டு உயர்தர பாடசாலைத் தலைமையாசிரியர், திரு. சாமிவேலாயுதம் பிள்ளை பி. ஏ. எல். டி. அவர்கள், ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். தேவாரத்தில் மூன்றுவித தமிழும் இருப்பதாகவும், தமிழ்நாட்டுச் சங்கீதக் கூட்டங்களில் தெலுங்கு பாட்டுகளே அதிகம் பாடப் பெறுகிறதென்றும், வேறு நாடுகளில் அப்படியில்லையென்றும், பொருள் தெரியாத பாடல்களைக் கேட்பதால் பயனில்லையென்றும் கூறினார்கள்.

பின்னர் திரு. சே. சிவஞானம் பிள்ளையவர்கள் "திருஞானசம்பந்தர்" என்பது பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

காவிந்தண்டலம் திரு. வேதாசல முதலியார் அவர்கள் "உருவ வழிபாடு" என்பது பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தும் போது உருவ வழிபாட்டின் அவசியத்தைப் பற்றி உதாரணக்கதைகளோடு விளக்கினார்கள்.

அதற்கப்பால் தூத்துக்குடி திரு. ந. சிவகுருநாத பிள்ளை அவர்கள் "சித்தாந்த முத்தி" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்

திரு. வி. சே. ஆறுமுக முதலியார் அவர்கள், "மெய்ப்பொருள் நாயனர் திருக்குறிப்புத்தொண்ட நாயனர், திருநீலகண்ட நாயனர், இளையான் குடி மாற நாயனர், நந்தனர், அப்பூதியடிகள்" ஆகியவர் சரித்திரங்களைப் புகைப் படங்களுடன் விரிவுரை செய்தார்கள்.

திரு. கி. குப்புச்சாமி முதலியார் அவர்கள், "திருக்குறளும், சைவமும்" என்பது பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். திருக்குறளில் கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை என்ற அதிகாரங்களிலுள்ள கருத்துகட்கும், தேவார திருவாசகங்களிலுள்ள கருத்துகட்கும் ஒற்றுமை காட்டி நகைச்சுவைபடப் பேசினார்கள்.

பின்னர், தலைவர் தம்முடிவுரையில் தாம் கடவுள் உண்டென்ற நம்பிக்கையுடையவரென்றும், கடவுள் சைவசமயத்தில் மக்களுடன் சம்பந்தப்பட்டிருக்கிறார் என்றும், சமய வாழ்க்கையே மேலானதென்றும், எல்லாருடைய நலத்தையும் கருதுபவனே உயர்ந்தவன் என்றும், தம்முடைய சொந்த அனுபவங்களைக் காட்டிப் பேசினார்கள்.

கடைசியாக அமைச்சரவர்களும், கூவம் சைவசித்தாந்த சபையினரும் தலைவர், சொற்பொழிவாளர் முதலியோர்க்கு வந்தனம் கூற, கூட்டம் இரவு சுமார் 10 மணிக்கு இனிது முடிந்தது. பின்னர் கூட்டத்தினர் திருவாசகத்தை யோதிக்கொண்டு ஊர்வலமாக விடுதிக்குச் சென்றனர். மூன்றுநாட்களிலும் கூட்டம் சிறப்பாக நடைபெற, கூவம் சைவசித்தாந்த சபையாரும், சிறப்பாக திரு. வி. துரைசாமி முதலியார் அவர்களும் செய்த பேருதவி பெரிதும் போற்றத்தக்கது. ஓம் சிவம்.